SRI M. K. SOMASUNDARAM: இந்த சேதுசமுத்திரத்திட்டம் எவ்வளவு காலத்திற்குள் எடுத்துக்கொள்ளப்படும்?

THE HON. SRI P. KAKKAN: இதற்கான போரிங் பரிசீலனை முடிந்த பின்னால்தான் இதைப் பற்றிக்கூற முடியும்.

SRI T. R. RAMAMIRTHA THONDAMAN: இந்த சேதுசமுத்திரத் திட்டம் பரிசீலிக்கின்ற பொழுதே, இப்போது கொழும்புக்கு பிரயாணிகள் போகின்ற தனுஷ்கோடி பீயரை மூடிவிடப்போவதாக அரசாங்கம் முடிவு செய்திருக்கிறது என்று மக்கள் புகார் செய்கிறார்களே அது வாஸ்தவமா?

THE HON. SRI P. KAKKAN: இதைப்பற்றி பின்னால் கேள்வி வருகிறது. அப்போது இந்தக் கேள்வியை கேட்கலாம்.

SRI N. K. PALANISAMI: ஸார், சென்னைக்கு வரக்கூடிய கப்பல்கள் இட நெருக்கடி காரணமாக விசாகப்பட்டிணத்திற்கு (வைசாக்) டைவர்ட் செய்யப்பட்டு அனுப்பப்படுகிறது. ஆகவே இப்போதுள்ள போர்ட்டை அபிவிருத்தி செய்து வருவது எவ்வளவு முக்கியம் என்று கருதப்பட்டு வருகிறதோ, அந்த அடிப்படையில் இந்தத் திட்டத்தையும் எவ்வளவுதான் செலவு ஆனாலும் இதை எடுத்துக்கொள்ளவேண்டும் என்று நமது சர்க்கார் மத்திய சர்க்காரை நிர்பந்தம் செய்வார்களா?

THE HON. SRI P. KAKKAN: நான் முன்னால் கொடுத்த பதிலில் சொன்னேன், இந்த அரசாங்கம் மத்திய அரசாங்கத்துடன் இதைப்பற்றி பல முறை பேசியிருக்கிறது என்று. அதோடு கனம் அங்கத்தினர் அவர்கள் சொல்லுகிறபடி கப்பல்களிலிருந்து இட நெருக்கடி காரணமான சீக்கிரமாக சாமான்களை இறக்க முடியவில்லை என்றிருப்பதால்தான், அதை தவிர்ப்பதற்கு, நாகப்பட்டிணம், கடலூர் போன்ற போர்ட்டுகளையும் அபிவிருத்தி செய்வதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

*Electric supply to Government offices (Thanjavur)*

* 1074 Q.—SRI T. R. RAMAMIRTHA THONDAMAN: கனம் ரெவினியு அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) தஞ்சை ஜில்லாவில் உள்ள மின்சார வசதி இல்லாத எல்லா அரசாங்க காரியாலயங்களிலும் மின்சாரம் போட உத்தேசம் உண்டா?

(இ) கும்பகோணம் தாலுகா ஆபீஸ் மிகவும் இருண்டு கிடப்பது அரசாங்கத்திற்குத் தெரியுமா?

THE HON. SRI M. A. MANICKAVELU: (அ) Yes, Sir. The Government have already issued odrers to this effect.

(இ) Yes, Sir. Orders for electrification have been issued already.

25th March 1961]

**Sri T. R. RAMAMIRTHA THONDAMAN** : ஸார், மின்சாரம் இல்லாத காரியாலயங்கள் பூராவிலும் மின்சார வசதி செய்து கொடுக்கவேண்டும் என்று பல முறை வற்புறுத்தப்பட்டிருக்கிறது. டெப்யூடி தாசில்தார் ஆபீஸ், தாசில்தார் ஆபீஸ், போன்ற ஆபீஸ்களில் ஒரே அதிகாரியாக இருந்து வேலை செய்யக்கூடிய நேரத்தில் அரிக்கன் லைட்டை ஏற்றிவைத்துக்கொண்டு வேலை செய்து கொண்டிருந்தார்கள். இப்பொழுது பல தாசில்தார்கள் வேலை செய்யுமிடம் மின்சாரம் கிடைப்பதற்கு பக்கத்தில் மின்சாரம் இருக்கிறது. ஆகவே இம்மாதிரிப்பட்ட காரியாலயங்களுக்கு எல்லாம் மின்சாரத்தை விஸ்தரித்து மின்சார விசிறிகள் போடுவதற்கு சீக்கிரம் அரசாங்கம் முன்வருமா என்று கேட்கிறேன்?

**The Hon. Sri M. A. MANICKAVELU** : இம்மாதிரிப்பட்ட காரியாலயங்களுக்கு எல்லாம் தாராளமாக மின்சாரம் கொடுக்க வேண்டும் என்று 5—10—1960-ல் அரசாங்கம் உத்தரவு போட்டிருக்கிறது.

**Sri R. SRINIVASA IYER** : ஸார், சர்க்கார் காரியாலயங்களுக்கு மின்சாரம் கொடுக்கவேண்டும் என்று தஞ்சாவூர் ஜில்லாவை (a) சப் கிளாஸில் சேர்க்கப்பட்டிருக்கிறது. 5—10—60 உத்தரவு போட்டாய்விட்டது என்று மந்திரி அவர்கள் கூறினார், இதற்கான எஸ்டிமேட் ஏதாவது போடப்பட்டிருக்கிறதா? இந்த வருஷத்தில் ஒன்றிரண்டு ஆபீஸ்களிலாவது போடுவதற்கு சர்க்கார் நடவடிக்கை எடுக்குமா?

**The Hon. Sri M. A. MANICKAVELU** : Rupees 3 lakhs has been sanctioned towards the expenditure for electrifications and fans in all the Government non-residential buildings and an expenditure of Rs. 1·50 lakhs towards provision of electrifications and fans in all the Government non-residential buildings in 1960–61. In G.O. Ms. No. 172, dated 19th January 1961, the Government have accorded administrative sanction to the schemes included in the list appended thereto and have instructed the Chief Engineer to take up and complete the works before the end of the financial year 1960–61.

**Sri J. MATHA GOWDER** : ஸார், கனம் அமைச்சர் அவர்கள் சொன்ன பதிலில் ஃபான்க்கும் தொகை ஒதுக்கப்பட்டிருப்பதாக சொல்லப்பட்டிருக்கிறது. நீலகிரி மாவட்டத்தைப் பொறுத்தவரை ஃபான் அவசியமில்லையாதலால் அங்குள்ள ஆபீஸ்களுக்கு ஹீட்டர் கொடுக்க அரசாங்கம் முன்வருமா?

DEPUTY SPEAKER : This question relates to Tanjore district and not to the Nilgiris district.

*Retired Officers (Re-employment)*

* 1075 *Q.*—**Sri T. S. RAMASWAMY** : Will the Hon. the Chief Minister be pleased to state—

(*a*) the number of gazetted posts in which retired officers were re appointed during the last five years; and